# மேகமண்டலம்

கி. வா. ஜகந்நாதன்



அமுத நிலையம்

# மேக மண்டலம்

(கவிதைகள்)



கி. வா. ஜகந்நாதன்



அமுத நிலையம் லிமிடெட்
தேனாம்பேட்டை :: சென்னை-18

# முகவுரை

**ப**ள்ளிக்கூடத்தில் வாசித்துக்கொண்டிருந்த போதே எனக்குக் கவி எழுத வேண்டும் என்ற ஆசை முளைத்தது. கவியின் இலக்கணம் தெரியாததற்கு முன்பே கவியின் ஓசை ஒருவாறு மனசுக்குத் தட்டுப்பட்டது. ஸ்வர ஞானம் உண்டாவதற்கு முன்பு இசைஞானமும் ராகஞானமும் உண்டாவது எப்படி இயல்போ, அதுபோல இதுவும் இயல்புதான். என்னுடைய பன்னிரண்டாவது வயசில் இந்த ஆசை முளையிட்டது. நாளாக நாளாக அது வளர்ந்தது.

ஆசைப்படுவதற்கு எல்லோருக்கும் உரிமை உண்டு, ஆனால் ஆசை நிறைவேறுவது எத்தனையோ காரணங்களைப் பொறுத்தது. சின்னப் பிராயத்திலே கிராமத்தில் வாழ்ந்த போதெல்லாம் மனம் லேசாகக் காற்றோடு பறந்து, காவிரியோடு துளைந்து, மலரோடு மகிழ்ந்து உலாவியது. அக்காலத்தில் எத்தனையோ பிஞ்சுக் கற்பனைகள் முளைத்தன. சுதந்தர தேவியைப்பற்றிப் பல பல பாடினேன். அக்காலத்துப் பத்திரிகைகளில் அவை வெளிவந்தன. அவற்றைப் பாதுகாத்து வைக்காமையால் இப்போது அவை கிடைக்கவில்லை.

தமிழ் இலக்கிய உலகத்தில் புகுந்த பிறகு இமய மலையையும் கங்கையையும் பார்த்துப் பார்த்து வியந்தேன். காண்டா மிருகத்தையும் திமிங்கிலத்தையும் கண்டு பயந்தேன். தேனாறும் பாலாறுமாகத் தித்தித்த கவிஞர் பாட்டில் மூழ்கினேன். அவர்களும் பாடினார்கள்; நானும் பாடுவதாவது! — இந்த நினைவு சற்றே பிள்ளைப்பருவக் கற்பனையோட்டத்துக்கு நாண் பூட்டியது.

ஆனாலும் அவ்வப்போது பாடினேன். "**ஜோதி**" என்ற பெயருடன் பத்திரிகைகளில் கவிகளை வெளியிட்டேன்.

அவற்றில் சில இந்தத் தொகுதியில் இருக்கின்றன.

இவற்றைப்பற்றி நான் சொல்ல எவ்வளவோ உண்டு; ஒன்றும் சொல்வதற்கு இல்லையென்றும் தோன்றுகிறது. சொல்லலாம்; சொல்வதற்கு இது இடமும் அன்று, காலமும் அன்று என்று அமைகிறேன்.

இனியும் சில தொகுதிகளை வெளியிடலாம் என்ற ஆர்வம் இப்போது உந்துகிறது. பார்க்கலாம்.

கல்யாண நகர்
11—11—55

**கி. வா. ஜகந்நாதன்**

# உள்ளே

# மேக மண்டலம்

## 1

வான மண்டல மீதில் மிதக்களன்
மனத்தி லேஉற்ற ஆசையின் வேகமோ ?
போன சன்மத்தி லேபெற்ற வாசனைப்
பொற்போ? யாதும் அறிந்திலேன்; தூக்கத்தில்
ஏனெ னக்கிந்தச் சொப்பனம் வந்ததென்
றெதற்கிங் காராய வேண்டும்? அந் நற்கனுத்
தானு ளத்தொரு தண்மையைத் தந்தது;
சாற்று வேன்உங்க ளுக்கும் அதனையே.

2

மேக ஜாலங்கள் வானில் தவழ்ந்தன;
மின்ன லின்ஒளி வீசித் திகழ்ந்தது;
தேக பாரம் அறிந்திலேன்; யான்ஒரு
செவ்வி மேகத்தில் ஏறினேன்; எத்தனை
வேக மாக அதுசென்ற காலத்தும்
மெய்யில் இன்பம் மலிந்த துணர்ந்தனன்;
சோகம் ஏதிந்த மேக விலாசத்தில்?
தூய தண்மை மலர்ந்து விளங்கிற்றே.

3

மண்ணி லேநின்று பார்க்கின்ற பேர்கட்கு
வான மேகம் கறுப்பும் வெளுப்புமாய்
நண்ணல் அன்றி அழகொன்றும் தோற்றில;
நான்அம் மேகத்திற் கண்டதென் சொல்லுவேன்!
எண்ணில் எத்தனை வண்ணங்கள் இங்குள,
இசையும் அத்தனை வண்ணமுங் கொண்டன,
கண்ணி லேபடக் கண்டேன்; அவைகளின்
காட்சி யால்வரும் இன்பம் அளவுண்டோ?

4.

மேகம் ஒன்றனை ஒன்று தழுவலும்
மெல்லச் செல்லெனச் சொல்வதும் மற்றவை
ஏகும் போது சிரிப்பதும் பாடலும்
இசையி லேமழை பெய்தலும் வந்தவர்க்
காகும் காரியம் யாவையும் பார்ப்பதும்
அரிய காதை புகல்வதும் ஆர்ப்பதும்
தாக மேவின் இனியநற் பானங்கள்
தருவ தும்நல் வியப்பு வியப்பரோ !

5

முத்தம் இட்டுக் குலாவிய சத்தத்தை
மூடர் மண்ணில் இடியெனச் சொல்வராம் !
தத்த மக்குள் நகைக்கும் ஒளியினைத்
தரணி யோர்மின்னல் என்று நினைப்பராம் !
ஒத்த வண்ணம் மலிந்தநன் மேகங்கள்
உவகை யால்வினை யாடின்அப் போழ்தங்கே
நித்தம் தோன்றும் அழகை உணராமல்
நீண்ட வானத்தின் வில்லெனக் கொள்வராம் !

## 6

மேக நாட்டில் அடிமைகள் இல்லையாம்;
வேந்தன் என்றொரு பேரும்அங் கில்லையாம்;
சோகம் என்பது கேட்டதும் இல்லையாம்.
சூரி யன்தெய்வம்; சந்திரன் பாவையாம்.
லோகத் தேகாணும் கோவம் கொடுமைகள்
குத்தி ரம்இவை யாரும் அறிகிலார்.
தேகத் தால்உயி ரால்உள்ளத் தாற்பிறர்
சேவை செய்வது வேதம் அவர்கட்கே.

# முதற் பூ

1

பதியம் வைத்துப் பாடுபட்டுப்
பச்சைக் கொழுந்து விடக்கண்டு
நிதியம் பெற்ற பேறெனவே
நினைந்தோம்; குண்டு மல்லிகைதான்
புதிய அரும்பு விட்டொருநாள்
பூக்கும் என்று காத்திருந்தோம்;
முதிய இலையை உருவிவிட்டோம்;
மொட்டுக் காண வில்லையரோ!

## 2

ஒருநாள் என்றன் காதலிதான்
ஓட்ட மாக ஓடிவந்தாள்;
திருநாள் வரப்போ கின்றதென்றே
சிரித்துக் கூவிக் குதுகலித்தாள்.
வருமோ என்று காத்திருந்த
மல்லி கைப்பூ மலரும்என்றே
திருவாய் மலர்ந்தாள்; எனக்குமனம்
சிறிதே மலர்ந்துள் உவந்ததுவே.

## 3

"எங்கே எங்கே, பார்த்திடுவோம்!"
என்றே அவளைத் தொடர்ந்தோடி
அங்கே சென்றேன்; ஆச்சரியம்!
அரும்பு கட்டி ஒருகொத்து
எம்கா தலுக்கோர் உருஎன்ன
இலங்கக் கண்டேன்; முதற்பூவை
இங்கார் பறிப்ப தென்னும்ஒரு
விவாதம் எமக்குள் எழுந்ததுவே.

4

"நான்ருன் பறிப்பேன்; மோந்திடுவேன்"
என்ருள் அவள்;நான் கைமறித்தே,
"ஏன்ருன் இந்த ஆத்திரம்? நான்
எல்லாப் பொருட்கும் தலைவனன்ருே?
சான்ருேர் கணவன் உயர்வெனவே
சாற்று வதைநீ கேட்டிலையோ?
தேன்தான் ஒத்த மொழியாய்! நீ
சிறிதே எண்ணிப் பார்"என்றேன்.

5

"இந்தப் பூமி தனில்ஆண்கள்
எல்லாப் பொருட்கும் உரியதென்ப
தந்தக் காலம்; மகளிரெலாம்
அடிமை என்றல் பழையகதை;
எந்தப் பொருளும் யாவர்க்கும்
உரிய தென்ப தேஇன்று
முந்தப் பரவும் உண்மை;இதை
முற்றும் மறுத்தல் கூடுமோ?"

6

என்ருள். மேலே வளர்ப்பதனுல்
ஏதும் பயன்இன் றென்றெண்ணி,
"நன்ருய் நின்றன் விருப்பம்போல்
செய்வாய்" என்று நவின்றனன்யான்.
"இன்றே நீங்கள் பெண்உரிமைக்
கிசையும் உள்ளம் கொண்டீர்கள்;
நன்றே நன்றே!" என்றுரைத்து
நகைத்தாள்; பெண்டிர் வலியென்னே!

7

கோடி கொடுத்த தன்மைபோல்
குண்டு மல்லி கைக்கொடியில்
நாடி நின்ற பூஒன்று
மலர்ந்த தென்று நாம்அறிந்தோம்.
ஓடி யாங்கள் இருவர்களும்
உற்ருேம் அங்கே; காதலிதான்
பாடி மகிழ்ந்தாள்; ஆடிநின்ருள்;
பறித்தாள் அல்லள் அம்மலரை.

8

8

"பறிக்க மனசு பொருந்தவில்லை;
பறித்து நீங்கள் கொள்க"என்றாள்.
குறித்த படியே அவள்பறிக்கக்
கூசு கின்றாள் எனஅறிந்தேன்.
தெறித்த மொழியில் அவளொடன்று
கலகம் செய்து சிணுங்கியயான்
நெறித்த புருவத் தொடுநின்றேன்;
நெஞ்சு பறிக்கத் துணியவில்லை.

9

நாங்கள் வளர்த்த மல்லிகையாம்
நங்கை பூவால் நகைகொண்டாள்;
ஏங்கி இருந்த நாங்கள்அந்த
எழிலார் நகைகண் டின்புற்றோம்.
தாங்கும் மலரைப் பறித்துவிடல்
தழைத்த கொடியின் அழகழித்துத்
தீங்கு செய்வ தாம்என்றே
திகைத்தோம்; பறித்தல் விடுத்தோமே !

# வீணை

1

தூங்கத்தி ஞல்ஒரு வீணையைச்—செய்து
தங்கத்தி ஞல்தந்தி பூட்டினேன் ;
துங்கக் கலைமகள் பாதத்தில்—வைத்துத்
தோத்திரம் செய்து சமர்ப்பித்தேன்.

2

கண்ணை இமைக்கின்ற நேரத்தில்—அதைக்
காலால் உதைத்து நகைத்தனள்;
விண்ணில் இமைக்கின்ற மின்னல்போல்—தந்தி
மின்னிய தன்றி ஒலிஇல்லை.

3

தந்தத்தி னால்ஒரு யாழினை—வெள்ளித்
தந்தியைப் பூட்டி வழங்கினேன்;
சொந்தத் தொடுங்கலை நாயகி—அதைத்
தூவென்று தள்ளி உடைத்தனள்.

4

நெஞ்சில் எதையோ நினைந்துநான்—சற்று
நேரம்கண் ணீர்விட் டுருகினேன்;
"பஞ்சைஇவ் வீணையை ஏற்றருள்"—என்று
பாவை திருக்கையில் வீழ்ந்தனன்.

5

விந்தை இதுவிந்தை விந்தைகாண்!—அவள்
மெல்லஎன் நெஞ்சைத் தடவினள்;
சிந்தையில் இன்பம் நிறைந்தது;—மிகத்
தெளிவு பிறந்தது; பாடினேன்.

**6**

கற்பனைக் காட்சிகள் பாடினேன்;—உயர்
காதலை அன்பினைப் பாடினேன்;
வெற்பினைப் போல்பவர் வீரத்தைக்—குரல்
வீணையில் மெல்ல எழுப்பினேன்.

**7**

உயிருள வீணையென் றேஅவள்—கையில்
உள்ளத் தருள்கொண்டு வைத்தனள்;
செயிர் இதில் எத்தனை யாயினும்—இது
தேவிக் கருப்பணம் ஆயதே!

# முள்ளும் மலரும்

1

முள்என்று வெட்டினை நீ;—உள்ளே
மொட்டும் மலரும்அவ் வெட்டில்அழிந்தன.
கள்என்று தட்டிவிட்டாய்;—அதில்
கலந்த அமுதம் நிலந்தனில் வீழ்ந்தது.

2

ஓடென் றுடைத்தனையே;—உள்ளே
உள்ள பருப்பையும் தள்ளிவிட் டாயன்றோ ?
காடென்று தீயைவைத்தாய்;—அதிற்
கமழும் மலர்க்கொடி காய்ந்தது கண்டிலை.

**3**

கல்லென்று கொட்டினையே;—கல்லுள்
  கண்ணுக் கினிய மணியை மறந்தனை.
வில்லென் றெடுத்துநின்றாய்;—அதில்
  வீணை நரம்பு செறிந்தது கண்டிலை.

**4**

சிப்பியை வீசிவிட்டாய்;— உள்ளே
  சேர்ந்தநன் முத்துச் சிதைந்த தறிந்திலை
குப்பையென் றேளறிந்தாய்;—ஒளி
  கொண்டு திகழ்ந்ததங் கத்தினைக் கண்டிலை.

**5**

கண்டதை விண்டொழிந்தாய்;—கண்ட
  காட்சியி லேஓர் கருத்தை அறிந்திலை.
வண்டை வெறுத்தோட்டினாய்;—அதன்
  வாயில்ரீங் காரம் இருந்த துணர்ந்திலை.

# நீதான்

1

"கதவினைத் தட்டுவார் யார்?" என்று
காதலி கேட்டனள்; யான்என்றேன்.
இதமுடன் வந்தவள் திறப்பளென்
றெண்ணினேன்; கதவு திறந்திலள்!

2

மீட்டும் ஒருமுறை தட்டினேன்;
மீட்டும்யார் என்று வினவினள்.
காட்டிய அன்புக் குரலில், "நின்
காதலன்" என்றேன்; திறந்திலள்!

## 3

பின்னும் ஒருமுறை தட்டினேன்;
    பெயர்த்தும்யார் என்றே வினவினள்;
புன்னகை யோடு,"நீ தான்"என்றேன்;
    பொருக்கென வேதிறந் தாளரோ! *

* ஆங்கிலக் கவிதை ஒன்றைத் தழுவியது.

# மல்லிகைப் பூ

1

கோணற்கண் பார்வையினில்
கோபங் கொண்டவள்
குதித்துப் பிரிந்துசெலும்
கோலம் கண்டபின்
நாணிப் படுத்துவிடல்
நல்ல தன்றென
நான்செய்த தந்திரத்தைக்
கேட்டிடு வீரே:

காணத் தகுந்தமுற்றப்
பந்த ரினிலே
கண்ட அழகுடைய
மல்லிகைப் பூவை
மாணப் பறித்தவள்தன்
பின்னே சென்றவள்
மயிரிற் செருகிவிட்டுக்
கைகட் டிநின்றேன்.

**2.**

திரும்பிச் சிரித்தமுகக்
கோலத் தினிலே
சேர்ந்த நகைமல்லிகை
யின்மு கைபோல
அரும்பித் திகழ்ந்ததொரு
வார்த்தை சொல்லுவாள்;
"ஐயோ! மயிரைப்பிடித்
தார்இ ழுக்கிருர்?

விரும்பிப் புரப்பவர் இங்
கொருவர் இல்லையோ?
விதியோ?'' எனத்தணிந்த
குரலில் புகன்றாள்.
"கரும்பே! கனிரசமே!
யான் இருக்கின்றேன்;
காப்பேன்'' எனப்புகன்று
கட்டி அணைந்தேன்.

# அவள் பார்த்தது

*[பெண்ணைப் பார்க்க வந்த காதலனது பட்டு வேட்டியையும் பேச்சுச் சாதுரியத்தையும் பொன் நிறத்தையும் காளை போன்ற நடையையும் தாய் முதலியவர்கள் பார்த்தார்கள். ஆனால் அவளோ—?]*

**1**

**தாய் :**

**பட்டுக்கரை வேட்டிகட்டி**
**வந்து நின்முன்; பார்த்தையோ ?**

**அவள்:**

**பட்டுக்கரை வேட்டிஎன்று**
**பார்க்கவில்லை அம்மா நான் !**

2

தந்தை;

சொன்னவார்த்தை அத்தனையும்
அறிவுசொட்டக் கேட்டையோ ?

அவள்;

என்னசொன்னான் என்பதுவே
யான்அறியேன் தந்தையே!

3

தோழி:

பொன்னின்நிற மேனிஎன்றால்
பொய்படுமோ சொல்லடீ !

அவள்:

வன்னம்என்ன என்றுகண்கள்
மதித்ததில்லை தோழியே!

4

தங்கை :

காளைபோல வந்துநின்ற
கம்பீரந்தான் என்னபார் !

அவள்:

நாளைவந்தால் பார்த்ததனை
நவிலுகின்றேன் தங்கையே !

5

எல்லோரும்:

என்னதான்நீ பார்த்திருந்தாய் ?
என்னவார்த்தை கவனித்தாய் ?

அவள்:

மின்னல்போல நெஞ்சில்ஊன்றும்
விழிகளையே பார்த்தேன்நான் !

# சோக கீதம்

1

நட்ட நடுநிசியில்—சிறிய
நரம் பொலிப்பதுபோல்
விட்ட பெருமூச்சும்—இடையே
வேதனை யின்குரலும்;

2

சோகத்தைச் சொன்னாலும்—அதிலோர்
சுகம் இருந்ததடி;
வேகம் குறைத்துவிட்டேன்—கதவின்
வெளியில் நின்றிருந்தேன்.

3

தட்ட மனசும் இல்லை;—அதனைத்
தாங்கும் உளமும் இல்லை;
எட்டவே நின்றிருந்தேன்;—நின் உயிர்
ஏக்கத்தைக் கேட்டு நின்றேன்.

4

புன்னகை பூத்துயிரும்—மலர்ந்து
பூரிக்க வார்த்தைசொலும்
இன்னுரை கேட்டிருப்பேன்;—அதற்குள்
இன்பமும் கண்டிருப்பேன்.

5

நெஞ்சைப் பிளந்துவரும்—துயரம்
நிசியினி லேஎவரும்
கொஞ்சமும் கேட்பதின்றி—மிழற்றும்
குரலிசை இன்றறிந்தேன்.

6

பிரிவுத் துன்பத்திலே—உனது
பெருமை தெரியுதடீ;
சரியும் துயர்க்குரலும்—உன்னிடம்
சங்கீதம் ஆகுதடீ.

7

இனிய நகையொலியில்—தாள
இசை குலுங்குதடீ;
உனது துயர்க்குரலோ—உளத்தை
உருக்கும் இசைமயங்காண்!

# கலைஞன் செய்த பசுமை

## 1

வண்ணமலர் பூத்தொளிரப்
பச்சை வண்ணம்
மலிஇலைகள் தளிர்த்திருக்க
வனப்போ டேஓர்
பெண்அணங்கு நிற்கின்ற
பொலிவே போலப்
பெட்புடன்அம் மரம்அங்கு
நிற்றல் கண்டேன்;

கண்ணிணைகள் தண்மைஉறக்
கருத்தில் இன்பக்
கடல்பொங்க இயற்கைஎழில்
அரசு செய்து
விண்ணளவு தருவில்இலங்
குதலைக் கண்டு
வியந்துநயந் துவகையுற்று
வாழ்த்தி நின்றேன்.

2

இன்றொருவன் ஐயையோ
என்ன செய்தான் !
இலைப்பசுமை மலர்வண்ணம்
எல்லாம் போகக்
கொன்றனன்அம் மரந்தன்னைக்
'கொடிய பாவி
கோடரியால் இரக்கமின்றி
வெட்டிப் போட்டான்;

கன்றுவயிற் றிடைக்கருப்ப
மதிலே தூங்கும்
காராவைக் கொலைசெய்தான்
போன்ருன் அந்தோ!'
என்றுமனத் திடைநொந்து
கலங்கிச் சோர்ந்தேன்;
என்னபயன்? அழகெல்லாம்
உலர்ந்த தாலோ!

3

பின்ஒருநாள் கொலைகாரன்
அவனே வந்தான்;
பிரியமுடன் எனைத்தன்வீட்
டினுக்க ழைத்தான்.
என்னவிசே டஞ்சொல்வாய்''
என்று கோபம்
எரியென்ன மூளஅவன்
றனையே கேட்டேன்.

"முன்னம்எங்கள் பெரியோர்கள்
வைத்த சாமி
மூளிபட்டுப் போயிற்றுப்
புதிய தெய்வம்
தன்னை அடி யேன்செய்து
வைத்தேன்; நீங்கள்
தயைசெய்து வந்துவிளக்
கேற்றி வைப்பீர்.

4

"இன்னடிசில் கனிதேங்காய்
இவைஎல் லாமும்
ஏற்றமந்தி ரஞ்சொல்லி
நிவேதி யுங்கள்;
துன்னுதட்சி ணைதருவன்
வருக என்று
சொன்னான்; நான் தச்சனென்று
தொழிலுஞ் சொன்னான்.

என்னவோ பார்த்திடலாம்
என நான் சென்றங்
கிருந்தகட வுட்பதுமை
யதனைப் பார்த்தேன்.
வன்னமிக வூட்டிவிழி
கவர்ச் செய்த
மரவுருவ மதைக்கண்டேன்;
கலையும் கண்டேன்.

5

கலையெழிலும் தெய்வத்தின்
ஒளியும் வண்ணக்
காட்சியினில் வடிவத்தில்
ஒருங்கே பார்த்தேன்;
"விலையரிய பதுமைஇதை
எங்கே கண்டாய்?
விருப்பமுடன் இதைச்செய்த
சிற்பி யார்?" என்

றலைஎறியும் களிதுளும்பக்
கேட்டேன்; சொன்னான்:
"அடியேன்றான் இதைச்செய்தேன்;
இங்கே பன்னாள்
நிலைநின்ற மரமொன்று
வைரம் பூண்டு
நிலவியதால் அதுகொண்டிப்
பதுமை செய்தேன்."

6

என்றான்; நான் துணுக்குற்றேன்;
'அதுவா! அந்நாள்
இவன்பாவி கொன்றானென்
றெண்ணினேமே!
குன்றாத எழில்பொருத்திக்
கோயி லுக்குள்
கூட்டுகின்ற தெய்வமெனச்
செய்து விட்டான்!

என்றேனும் அந்தமரம்
பட்டு வீழ
யாரேனும் விறகாக
எரித்துப் போவார்.
இன்றேஇக் கலைஞனைதைப்
பசுமை செய்தான்;
இணையுண்டோ இதற்'கெனவே
எண்ணி னேனே.

## மயில்

1

பச்சைப் பசிய தோகைஎழில்
பரப்பிக் கண்கள் விளங்கநின்றன்
இச்சைப் படியே முகில்கண்டே
இன்புற் ருடும் மாமயிலே!
பிச்சைப் பெருமான் தனக்கினிய
பிள்ளைப் பெருமான் மகிழ்வோடு
மெச்சிப் பவனி கொளத்தாங்கும்
மேன்மைக் கென்ன தவஞ்செய்தாய்?

3

2

வளைத்துக் கழுத்தை நெளிவாக்கி
மகிழ்ச்சி பூத்துக் கால்பெயர்த்துத்
திளைத்த கோலப் பேரழகு
தெறிக்க நடஞ்செய் மாமயிலே!
விளைத்த நின்சீர்ப் பொலிவெல்லாம்
விழையும் பறவை பலஇருந்தும்
களைப்பொன் றறியா நினக்கிதுதான்
காணி யான காரணம்என்?

3

நீல மேனி படைத்திருந்தாய்;
நெடிய கழுத்துக் குழைவுடையாய்;
ஆல வட்டம் போல்தோகை
அவிழ்த்து நடம்நீ பயில்கின்றாய்;
கோலும் நின்றன் நடம்போலக்
குவல யத்தே மடமகளிர்
ஏலப் பயின்றும் வாராத
ஏற்றம் எங்கே கற்றனை நீ?

# எங்கள் மாந்தோப்பு

1

மாலைப் பொழுதழகு
வீறி நின்றஅம்
மாமரத் தோப்பினிலே
தென்றல் அசையச்
சோலை வளத்தைவிழி
கண்டு களிக்கத்
துன்பம் மறந்துடலில்
தண்மை புகவே

வேலை மிகுதியினால்
வந்த வருத்தம்
விட்டுப் பறந்தொளிக்க
மேவி இருந்தேன்.
சாலைப் புழுதியிலே;
சந்தை இரைச்சல்
சற்று கிலும்அவ்விடம்
சார்ந்த தில்லைகாண்.

2

பூங்கா வனத்திடையே
செய்குன் றத்திலே
பூமணம் வீசஅங்கே
ஊற்றுப் புனல்தான்
தேங்காமல் ஓடிவர
அள்ளிக் குடித்தே
சிரித்துப் பொழுதுபோக்கும்
வாழ்க்கை அறியேன்.

ஏங்காம லேஇருக்க
நெஞ்சம் எண்ணினுல்
எங்கள்மாந் தோப்பினிடம்
சரண்பு குவன்யான்;
பூங்காவும் செய்குன்றமும்
இல்லேஎன் ருலும்
பூரிக்கும் இன்பத்திலே
குறைவு வருமோ ?

### 3

பாட்டனுர் நட்டுவைத்த
பழைய மாமரம்
பழுத்துக் கனிந்துநிற்கப்
பார்த்திருப் பீரேல்,
கூட்டுக்குள் ளேபுகுத்திக்
கொஞ்சும் கிளிபோல்
கோலிய வேலிக்குள்ளே
பட்ட ணத்திலே

நாட்டிய பூங்காவனம்
என்னத்துக் காகும்?
நல்ல திதுவெனவே
நாடிடு வீரே
ஏட்டில் எழுதிவைப்ப
தன்று; கண்ணிலே
எழுதி மனத்தினிலே
தீட்டு வதுவாம்.

4

தென்ன மரம்அடர்ந்த
கூட்டத் திடையே
சேருங் கமுகமரம்
கொத்துக்கொத் தாக
வன்னக் குலையைஈன்று
நிற்பது வுமவ்
வானப் பறவைஅதைக்
கொத்துவ துமே

இன்னமென் நெஞ்சிற்படம்
மாட்டி விட்டன.
இத்தனை காட்சியும்நீர்
கண்டனி ரென்றால்,
என்ன பயன்பணத்தைக்
கொட்டி நகரில்
இயற்றும் பொழில்களென
எண்ணுதல் திண்ணம்.

# து ற வி

1

வானை முத்தம் இடுகின்ற மாமலை!
மாலை போல அருவிகள் வீழ்வன !
மோனம் மேவிய உச்சியி லேஅங்கு
மூண்ட மேகங்கள் பன்னிய பஞ்சுபோல்
ஆன தோற்றமுற் றேடின. அவ்விடத்
தைய னோர்துற விப்பெரு மான்அவன்
ஞான நாயகன் தூய உருவினன்;
நானென் றோர்பொருள் அங்கவன் பாலிலை.

2

கண்கள் நல்லரு ளாம்கதிர் வீசுவ;
கல்வி யின்ஞெளி நெற்றியிற் காணலாம்;
புண்க ளேனும் அவன்சொலும் வார்த்தையிற்
பொட்டென் ருறிடும்; அத்தவன் செங்கரம்
எண்கள் இத்தனை என்று சபம்செய்தே
எண்ணி எண்ணிச் சிவந்த விரலின;
மண்க ளித்திட வேண்டிப் பெருந்தவ
வாழ்வில் நின்றன ஞல்அம் முனிவனே !

3

நெஞ்சி லேஉல கின்பம் உறஎண்ணி
நேய மோடவன் நித்தலும் வாழ்த்துவன்;
அஞ்சி லான்தனி மைக்கும்அங் கேஉள
ஆகும் துன்ப விலங்கினங் கட்குமே;
துஞ்சல் சோம்பல் சினத்தல் வியப்புறல்
சோர்தல் என்றிவை சற்றறி யாதவன்;
எஞ்சிச் சொல்வன அல்ல;உண் மைகளே;
இன்ப வாழ்வத் துறவியின் பால்உண்டால்.

4

காலை வேளையி லேகிழக் கேவரும்
கதிர வன்கதிர் இன்பம் உறுத்துமாம்;
நீல வானத்தி லேமுகில் மாரியை
நீண்ட நேரம்பெய் தால்இன்பம் மேவுமாம்;
கோல மார்அவ் வருவியி லேநின்று
குளித்தல் தேகத்தை வச்சிரம் செய்வதாம்;
சால இன்ப வகைகளைக் கேட்கிலோ
தட்டொன் றின்றிப் பொழிந்திடு வானரோ!

5

வான மேஒரு கூரையாம்; ஞாயிறும்
மதிய மும்விளக் காம்;பழம் நல்லுணு;
பானம் அவ்வரு விப்புன லாம்;மரப்
பட்டை யேதுகி லாம்;வனம் வாழ்வன
ஈனம் அற்றமெய்ந் நண்பர்க ளாம்;இன்பம்
இத்த னைக்குளும் ஊறி இருப்பதாம்!
ஞானம் அத்தனை பெற்றவன் சொல்வதை
நாம்அ றிந்து தெளிதல் அரிதம்மா!

## எங்கள் பாட்டி

1

'பாட்டி! தலைவலி' என்றுசொன் னேன்;அவள்
பட்டென்று சுக்கை அரைத்துப்போட்டாள்;
கேட்ட வியாதிக்கு கீரை கிழங்கு
கிராம்பு கடுக்காய் மருந்துரைப்பாள்;
வீட்டில் எவருக்குக் காய்ச்சலா னாலும்
விடிவதற் குள்அவள் சொஸ்தம்செய்வாள்;
'நாட்டு மருந்துக்குப் புத்தகம் ஏதுக்கு?
நான்சொல் சரக்கினைக் கேட்டி' டென்பாள்.

2

எங்கள் கிராமத்தில் முப்பது வருஷமாய்
எத்தனை யோபிள்ளைப் பேறுகளைச்
சங்கடம் இல்லாமல் விளக்கெண்ணெய் பூண்டினுல்
சாமர்த் தியமாகச் செய்துவிட்டாள்;
அங்கொரு பேர்த்திக்கு நளிர்சுரக் கஷாயம்
அரைத்துக் கொடுப்பாள்; மறுகணத்தில்
இங்கொரு வீட்டிலே மாந்தத்திற் காகவோர்
எண்ணெய் வடிப்பாளெம் பாட்டியம்மா !

3

நோய்க்கு வயித்தியம் செய்வது தானு? நீ
நூதன மாகவோர் வேட்டிகட்டு;
வாய்க்கு வருவதெல் லாம்சோ திடமாக
வகுத்துரைப் பாள்;எதிர் ஓடினஅந்
நாய்க்கு நரிக்குச் சகுன பலன்சொல்வாள்;
நாளொடு நட்சத் திரங்கள்சொல்வாள்;
தாய்க்குக் குழந்தைக்கு மாமனுக் காகாத
சாத்திரம் எல்லாம் விரித்துரைப்பாள்.

4

"பாட்டி! பாட்டி!ஓர் கதைசொல்ல மாட்டாயா?
படுத்துக்கொள் வோம்"என்று*சொல்லிவிட்டால்,
நீட்டி இனித்த சுவைக்கதை எத்தனை
நேரஞ்சொல் வாள்!அதில் ஈடுபட்டால்
வீட்டில் இருக்கும்எங் கள்மனம் காட்டிலும்
விண்ணிலும் ஓடி விளையாடும்;
நாட்டில்இல் லாதபுத் தம்புதுக் காட்சிகள்
நனவினி லேகன வாக்கிவிடும்.

5

மருத்துவம் சோதிடம் கதைசொல்வ தெல்லாமும்
வல்லவள் பாட்டி; இவைமட்டோ?
பெருத்த கணக்கெல்லாம் கைவிரல் காட்டிப்
பிரித்துப் பொருத்தியே போட்டுக்கொள்வாள்;
தெருத்திண்ணைச் சுவரிலே தயிர்க்காரி போட்ட
சிறுபொட்டுப் பொய்யா நிசமாஎன்று
கருத்தில் நினைந்து கணக்குப்பார்த் துப்பின்பே
காசினைக் கையில் கொடுத்திடுவாள்.

6

எத்தனை பாட்டுக்கள் கேட்டாலும் பாட்டியின்
இனியதா லாட்டுக்கீ டாவதில்லை!
அத்தனை யும்அவள் நெஞ்சி லிருந்துதான்
அவ்வப் பொழுது புறப்படுமாம்!
சுத்தமா கஅவள் செய்யுள் இலக்கணத்
தொந்தர வைஅறி யாதவள்தான்;
"வித்தையா பாடுதல்? எகனை மொகனைகள்
வேணுமென் ருல்வந்து நிற்கும்"என்பாள்

7

அரிய மனுஷிஇப் பாட்டியைப் போல்பவர்
அகப்பட மாட்டார்கள்; கூடைபெட்டி
பெரிய நிரைச்சல்கள் கீற்று முடைவதில்
பேர்பெற்ற வள்ளங்கள் பாட்டியம்மா;
புரியவில் லைஅவள் செய்கையெல் லாம்;சில
புள்ளிகள் போடுவாள்; ஓர்கணத்தில்
அரியசித் திரங்கள் கோலப் பொடியினுல்
அமைத்து விடுகிருள்; ஆச்சரியம்!

## கட்டை வண்டிக் குப்பன்

### 1

கட்டை வண்டியை ஓட்டும் குப்பனைக்
காணும் போதெலாம் மகிழ்கின்றேன்.
இட்ட மேவிய அவன்செய் காரியம்
இனித்தி ருக்குது; சொல்லுவேன்:
துட்டன் அல்லன்;பொய் பேசு வான்அலன்;
சோம்ப லேஅறி யாதவன்;
மட்டி லாதநல் இன்ப வாழ்வவன்
மனைஇ ருப்பது காண்பிரால்.

## 2

பழைய வண்டியொன் றிரண்டு மாடுகள்,
பகரின் அன்னவன் உடைமையாம்.
விழைவி னேடுபல் பாரம் ஏற்றியே
வேற்றூர் மேவி இறக்குவான்;
பிழையி லாதுரி யார்க்குச் சேர்த்தபின்
பிரிய மோடவர் தரும்பொருள்
தழைம கிழ்ச்சியி னேடு பெற்றிடு
வான்;இ தேஅவன் றன்செயல்.

## 3

ஊரில் உள்ளவர் நம்பி யேசரக்
குள்ள யாவும் இவன் றன்பால்
சேர வைத்திவன் குறித்த ஊரினிற்
சேர்த்தல் கண்டு மகிழ்குவர் ;
நேரில் அன்னவர் இவனை நம்பி
நிகழ்த்து வார்செயல்; குப்பனே
யாரை நம்பினன்? அறிதி ரோ?இரண்
டெருதை நம்பி இருப்பனல்.

4

ஈது பொய்யிலை; மாலை வேளையில்
இரண்டு காளைக்கும் தவிடுவைத்
தோதும் அன்பினில் முதுகு தடவியே
உற்ற பாரங்கொள் வண்டியில்
தீதி லாவகை பூட்டி ஓட்டுவன்;
செறிஇ ருட்டினிற் சாலையில்
ஏதும் அச்சமின் றுத லின்வண்டி
இழுத்துச் செல்லும்அக் காளைகள்.

5

வண்டிக் கீழொரு விளக்குத் தொங்கும்;அம்
மங்க லான வெளிச்சமே
கொண்டு சாலையிற் போகும் காளைகள்;
குப்பன் தூங்குவன். மாடுகள்
மிண்டு செய்வதும் சாட்டை முறிவதும்
வினவின் அவன்அறி யாதன.
தொண்டு செய்வதிந் நெறியில் உற்றிடின்
துயர மேதுல கத்திலே ?

6

சோறு சமைக்கவும் தண்ணீர் ஊற்றவும்
சுகித்தி ருக்கவும் சொந்தத்தில்
கூறு மாமன்றன் மகளி னைக்கட்டிக்
கொண்டான்; அன்னவள் குப்பனுக்
கேறு மாறுசொ லாத வள்;அவன்
இட்ட தேசட்டம் என்பவள்;
பேறு வேறினிக் குப்ப னுக்குள
தென்னில் இல்லையென் பீர்அன்றோ?

# கவிஞன் கர்வம்

**1**

வாழ்க்கை நதிக்கரையில்—நிதம்
வந்திடு காட்சிகளில்
வீழ்ச்சி இலாதபல—இன்ப
விளைவினைக் கண்டிடுவோம்.

**2**

இன்ப நிகழ்ச்சிகளில்—நின்ற
இனிமை மணம்நுகர்வோம்;
துன்பக் கனலினிலும்—ஒரு
சோதியைக் கண்டுவப்போம்.

3

மலையை அளந்திடுவோம் ;—அதன்
மாட்சி தெரித்துயர்வோம்;
அலையைப் பிளந்திடுவோம்;—கடல்
ஆழத்தைக் கண்டுரைப்போம்.

4

கற்பனை யாம்பரிக்கே—ஒரு
கடிவாளம் என்பதிலை;
வெற்பினில் ஏறிவரும்;—அந்த
விண்ணினி லும்பறக்கும்,

5

உள்ளத்துள் ளேஒளித்த—இன்ப
உணர்ச்சியைக் காட்டிடுவோம்;
பள்ளத்துள் ளேபுதைந்த—செல்வப்
பரப்பை எடுத்தளிப்போம்.

6

காதல் அழகையெல்லாம்—உள்ளக்
காதுக் கினிதாகச்
சாதல் இலாதபடி—இசை
சாற்றிக் களித்திடுவோம்.

7

வீர விளையாட்டை—மனம்
வீறுகொண் டேதுடிக்கக்
காரத் தொடும்குமுறும்—பல
கவியில் உரைத்திடுவோம்;

8

குனிந்து குனிந்துமனம்—மிகக்
கோழையா னோர்களையே
முனைந்து நிமிர்ந்துநிற்க—எரி
மூட்டிக் கவிவளர்ப்போம்.

# அம்புலி

## 1

அத்தனை பாலைக்கொட்டிச்
சர்க்கரை போட்டே
அளியக் குழைந்தசோற்றை
இட்டுப் பிசைந்து
மெத்தவும் கொஞ்சிக்கொஞ்சி
வேடிக்கை பேசி
வெள்ளை நிலாவைக்காட்டி
வாயில் ஊட்டினேன்.

எத்தனை துஷ்டத்தனம்!
என்ன கொழுப்பங்
கெல்லாம் உமிழ்ந்துவிட்டே
அம்புலி காட்டித்
தத்தி எழும்பிஇந்த
வெண்ணெ யுருண்டை
தந்திட வேணுமென்று
தொந்தரை செய்வான்!

2

வீதியில் என்னஎவர்
விலைக்கு விற்றாலும்
வீட்டுக்குள் ளேஅழைத்தென்
முன்றா னைபிடித்
தோதி இழுத்துவேண்டும்
என்ற ழுகிறான்;
ஒன்று விடாமல்வாங்கிக்
கொடுத்து விடுவேன்;

மீது நிலாப்பொழியும்
அம்புலி காட்டி
மெல்லவே சோற்றைஅவன்
வாயில் ஊட்டினேன்;
'தூது' எனத்துப்பிவிட்
டம்மதி காட்டித்
தோசை இதுவெனக்கு
வேண்டும் என்கிறான்!

3

கையிலே வெள்ளிக்கிண்ணம்
கொண்ட தனிலோர்
கரண்டி அளிந்தசோற்றை
இட்டு ரசமும்
நெய்யும் நிறையவிட்டுப்
பிசைந்து வெளியே,
நின்று நிலாவைக்காட்டி
ஊற்றி இடையே

பைய வடகத்தினை
வாயிலே வைத்தேன் ;
படுத்திய பாட்டினுக்கோர்
அளவு கண்டிலேன் ;
கையில் எடுத்தெறிந்து
விட்டம் புலியைக்
காட்டி, அந்தஅப்பளம்
வேண்டும் என்கிறான்!

# யார் அழுகை நிறுத்துவார்?

1

"அழுத அழுகை போதுமடா!
அப்பா! என்ன வேண்டும்?" என்ருல்,
"கழுதை வேண்டும்; குதிரையுடன்
கட்டை வண்டி வேண்டும்" என்பான்;
அழுத அழுகை அடக்குவதற்
கனைத்தும் வாங்கித் தந்தாலும்
முழுதும் காலால் உதைத்துவிட்டு,
"முயல்தான் வேண்டும்" என்கின்ருன்!

2

விரும்பிப் பொம்மை எவ்வளவோ
விலைக்கு வாங்கித் தந்திட்டேன்;
"கரும்பு வேண்டும்" என்றான்; ஓர்
கருப்பங் கழிவாங் கித்தந்தேன்;
திரும்ப, "அதனை நறுக்கித்தா,
தின்பேன்" என்றான்; செய்துதந்தேன்;
"கரும்பு பழைய படியாக்கிக்
கையில் தா நீ" என்கின்றான்.

3

"ஆனை வேண்டும்" என்றழுதான்;
ஆனைப் பாகன் றனைக்கெஞ்சி
நீநில் என்றே அதன்அருகில்
நிற்க வைத்தேன்; "குடமொன்று
தான்இங் கெனக்கு வேண்டும்என்றான்;
தந்தேன்; "இந்தக் குடத்துக்குள்
ஆனை அதனைப் புகுத்"தென்றான்!
ஆரே அழுகை நிறுத்துவார்?

# அன்பு

1

கட்டழகன் திரள்தோளன்
மணமாகா இளைஞன்
கடைவீதி சென்றான் ; ஓர்
மாம்பழத்தை வாங்கிச்
சொட்டுசுவைக் கனியதனை
அவ்விடத்தே நறுக்கிச்
சொகுசாகத் தின்றுசுவை
கண்டுமகிழ்ந் தனனே.

எட்டுணையும் பிறர்க்குதவும்
எண்ணம்அவன் உள்ளத்
திருக்கவில்லை; தன்னளவில்
அதைநுகர்ந்தான். அவனே
இட்டமுடன் ஒருமங்கை
தனைமணந்தான்; அந்த
இளங்கிளியோ டில்லறத்தை
இனிதுசெய லானான்.

2

முன்போலக் கடைசென்றான்;
இனியசுவைக் கனிகள்
முன்னிலுமே மலிவாகக்
கிடைத்தன;அங் கொன்று
தின்போம்என் றேவாங்கி
னான்;அதனை அங்கே
தின்னவில்லை; கைக்கொண்டு
வீட்டினுக்கு வந்தான் ;

இன்போங்கக் காதலியின்
கைக்கொடுத்தான்; அவளோ
எழிலாகத் திருத்திஅவன்
முன்வைத்து நகைத்தாள்;
அன்போடவ் விருவருமே
அதைநுகர்ந்து களித்தார்;
அப்போதங் கவ்விடத்தே
ஆனஇன்பம் பெரிதே.

3

சின்னாட்கள் செல்லஅவர்
தமக்கிறைவன் அருளால்
சேய்ஒன்று பிறந்துவளர்ந்
தின்மழலை பேசப்
பொன்னுக மணியாகப்
போற்றிவளர்த் தார்கள்;
பூவையந்தப் பெண்உறவு
வீட்டினுக்குப் போனாள்;

அன்னார்ஓர் மாங்கனியை
அளித்தார்கள்; அதனை
ஆசையுடன் குழந்தைக்கென்
றெடுத்தில்லம் வந்தாள்.
பின்னேவே றிடத்தில்அவள்
காதலனோர் கனியைப்
பெற்ருன் ; அங் கவனுந்தன்
சேய்க்கெனவே கொணர்ந்தான்.

4

மணமாகாப் பருவத்தில்
கனிவாங்கும் காலே
வயிருென்று வாயொன்று
தாஞெருவன் ஆஞன்;
மணமாகி விட்டபின்னர்த்
தனேமறக்க லாஞன்;
மனேயிருக்கும் காதலியைக்
கனியிஞெடு நினேந்தான்;

குணமாகப் பிள்ளைபிறந்
தவர் இருவர் அன்பைக்
கூடிவிரி வடைவுறவே
செய்ததிது கண்டீர்.
உணவாலே அல்ல; இஃது
உயிர்த்தன்மை அன்றோ ?
உயர் அன்பு மனிதமனத்
துதயஞ்செய் ததுவே.

5

காலையினிற் சிறைவிரித்துக்
ககனமெலாம் பறந்து
கண்டஉண வினைத்தேடி
உண்டுவரு பறவை
மாலையினில் அலகினிலே
உணவுபற்றிக் கொண்டு
மரவீட்டில் கூடென்னும்
அறையிலுள்ள பார்ப்பைச்

சாலநிறை அன்பினொடும்
அடைந்ததன்உள் வாயில்
சாரவைக்கும் அன்புநெறி
சற்றோர்ந்து பாரீர்!
காலம்மிக மாறிவிட்ட
தென்றுதுயர் கொள்வீர்;
கருதுமினோ : பறவையன்பு
குறைந்ததுண்டோ? சொல்வீர்.

6

பால்கறக்கும் ஆயன்நன்கு
பால்சுரக்க வேண்டிப்
பண்ணுகின்ற தந்திரத்தின்
வகைநினைந்து பார்மின்;
ஏலவுறு கன்றதனைத்
தாயருகில் நாவால்
இன்புறவே வருடும்வணம்
நிற்கவைத்துக் கறப்பான்;

பால்சுரப்ப தற்குமுனம்
அன்புசுரந் திடுமே,
பாவம்!அந்தப் பசுவின்அன்பு
தன்னைவஞ்ச மாகக்
கோல்பிடித்த ஆயன்தன்
நலத்துக்காத் தூண்டித்
கொள்ளுகின்ற பயனறிவான்;
அன்பைமறக் கின்றான்!

7

கொலைசெய்யும் சிங்கமும்இவ்
வுலகத்தில் வாழ்ந்து
குட்டியினை ஈன்றுவளர்த்
திடுவதன்புச் செயலே;
நிலைகொள்ளும் அன்பின்றேல்
உயிர்உடலில் வாழும்
நீதியெலாம் கொடுமையினால்
நிலைகுலைந்து போகும்;

அலைகொள்ளும் மனத்தில்அன்பு
புகுந்துவிட்டால் அங்கே
அமைதிவரும்; தனைமறக்கும்
அரியநிலை வருமே;
கலைகொள்ளும் அறிவுடைய
சான்றோர்கள் யாரும்
கல்வியினால் உலகில்லை;
அன்பினில்வாழ் வென்றார்.

(வேறு)

8

சின்னஞ் சிறிய குழந்தை—அதன்
செய்தியைச் சற்றெண்ணிப் பாரீர் ;
முன்னம் வளையைத் திருடிச்—சென்ற
முரடன் கனிதரிற் செல்லும்.

9

பக்கத்து வீட்டு மனிதன்—பழம்
பகைவன் எனஎண்ணி வாழ்வோம்;
துக்கத்தில் இன்பச் செயலில்—அவன்
துணையலன் என்று நினைப்போம்.

## 10

நம்முடை வீட்டுக் குழந்தை—தெரு
நண்ணி அயல்மனை மகவு
விம்மி அழுவது கண்டால்—மெல்ல
விரும்பி அதன்கண் துடைக்கும்.

## 11

பகையென் றுறவென்று நெஞ்சில்—அந்தப்
பச்சைக் குழந்தைகட் கில்லை ;
சிகைபிடித் தேசண்டை போடும்;—வெகு
சீக்கிரம் கட்டித் தழுவும்.

## 12

பிஞ்சுப் பிராயத்தில் ஈசன்—நெஞ்சில்
பேணுதற் கன்பினை வைத்தான்;
வஞ்ச உலகில் வளர்ந்து—பகை
வளரஅவ் வன்பைத் தொலைத்தோம்.

13

ஆணென்றும் பெண்ணென்றும் வைத்தான்;—
ஐயனும் ஆண்பெண்ணா நின்றான்; [அருள்
காணுமீ தன்பு வளரத்—தெய்வம்
காட்டும் வழியன்றி என்னே ?

(வேறு)

14

அன்பெனும் பிடியில் அகப்படும் மலையென்
றுண்டவன் தனைப்புகழ்ந் தார்கள்;
அன்பினால் உலகம் உவத்தலைக் கண்டோம்;
அன்பினாற் காதலும் உறவும்
மன்பதைக் குள்ளே வளர்வது சரதம்;
மாக்களை மக்களா மாற்றி
இன்புறச் செய்யும் வகையினால், அன்பே
இறைவனென் றுரைப்பது வேதம்.

மேக மண்டலம்

## 15

(வெண்பா)

அன்பின் வழிய துயிர்நிலை அஃதிலார்க்
கென்புதோல் போர்த்த உடம்பென்று—முன்புரைத்த
வள்ளுவனார் செஞ்சொல் வகையினையோர்ந் தன்பு
துள்ளுமே எங்கும் சுகம்.                    [செயின்

# என்று விடியும்?

**வா**ன விளிம்பினிலே வைகறையின் தோற்றத்தை
ஞான முனிவரெல்லாம் நன்கறிந்து சூரியனை

வாழ்த்தப் புகுகின்றார். மாநிலத்தா ரைத்துயிலில்
ஆழ்த்தும் இருள்தான் அகலுமெனக் கொக்கரிக்கும்

கோழிக் கறிவு கொடுத்தவரார்? கூட்டினுள்ளே
வாழும் பறவையெல்லாம் வண்ண மயிர்கோதி

வேலைக்குப் போவோர்கள் வேண்டும் அலங்காரம்
சாலப் புரிந்துபுறஞ் சார்தல்போல் வான்வெளியில்

புக்குப் புறப்பட்டுப் போயினகாண். ஏழையர்கள்
ஒக்க உறக்கம் உணர்ந்து முழுகிவிட்டுக்

கூழைக் கலக்கிக் குடித்து முயற்சிமிகப்
பீழை மடியைப் பிளந்து புறப்பட்டார்.

எங்கும் விழிப்புக்காண்! எங்கும் இயக்கங்காண்!
எங்கும் சுறுசுறுப்பின் ஏற்றங்காண்! தோற்றங்காண்!

செங்கதிரோன் பூவுலகிற் சேர்த்திடுன் சீவசத்தி.
மங்கி உறங்கும் மனிதரெல்லாம் ஓடுகின்றார்.

கூடுகின்றார், கூடிக் குலவுகின்றார், தொண்டுபல
நாடுகின்றார், இன்னோர் நடுவினிலே செல்வமெனும்

சேற்றிற் குளித்துச் செருக்கும் மயலுடையார்
ஆற்றத் துயில்கின்றார்; அந்தோ அவருக்கே

இன்னும் விடியவில்லை. ஏழுமெத்தை யிற்படுத்தே
இன்னும் துயின்றார். எவரும் விழித்திருக்கக்

குன்றிக் குலைந்திருளே கூடிக் கிடக்கும்அவர்க்
கென்று விடியும் இனி?

# இளைஞனுக்கு

## 1

கண்ணைத் துடைத்துக்கொண்டு
கண்ணுடி யிற்பார் ;
காலைப் பொழுதில்முகக்
கடுமை யையொழி ;
விண்ணைப் பிளந்துசெல்லும்
முயற்சி ஆனாலும்
வேதனைப் பட்டுருகும்
சோர்வை ஒழிப்பாய்;

புண்ணைத் தடவிக்கொண்டு
பூரிப் பதுபோல்
பூஞ்சைக் குழந்தைகளைப்
போற்றிநில் லாதே;
மண்ணைக் கடலைஉன்றன்
சக்தி யதனால்
வளைத்துப் பிடிப்பதற்கு
வழிகளும் உண்டு.

2

சோம்பல் தனத்துக்குநீ
சோறு போடாதே.
தூங்கிக் கழிப்பதென்றால்
வாழ்க்கை போதாது.
சாம்பற் புழுதியிலே
புரண்டு கிடந்தால்
தண்ணீரில் ஆழ்ந்துடலைக்
கழுவ வேண்டுமே!

வீம்புக் குணத்தைவிட்டு
வெட்கத்தை விட்டு
விதிவிதி என்றுசொல்லும்
அழுகையை விட்டுப்
பாம்பு புலிக்கும்நெஞ்சம்
பயப்படல் விட்டுப்
பார்ப்போம் ஒருகையென்று
வீறு கொள்ளுவாய்.

3

பூமியைப் பார்த்துமுகம்
கோணிக் கொள்ளாதே ;
புதிய முயற்சியில்உன்
ஆண்மையைக் காட்டு;
காமமும் ஆசையும் உன்
கட்டளைக் குள்வை;
கண்ட பொருளுக்கெல்லாம்
கருத்திழ வாதே ;

சாமமே ஆயிடினும்
கடமை யைவிடாத்
தைரியங் கொண்டுநெஞ்சு
நிமிர்ந்து நடவாய்;
நாமம் பெருமைஇவை
வேண்டுவ தில்லை;
நானும் மனிதனெனும்
நடத்தை போதுமே!

# கெட்ட பிள்ளை

கெட்டபிள்ளை என்றே
    விலக்கிவிட்டேன் ; கேட்டவர்க்குத்
துட்டத் தனமெல்லாம்
    சொல்லி அளக்கின்றேன்.
ஆனாலும் உள்ளே
    பொறுமல் அடங்கவில்லை.
போனாலும் போனான்;
    புதியஅன்பை உள்ளேற்றித்

தன்னை மறவாத்
　　தகைமையிலே மூச்செறிந்தேன்.
முன்னம் இருந்த
　　முழுவெறுப்புக் காணவில்லை.
கண்முன்னே நிற்கின்ற
　　காலத் தவன்தீமை
எண்முன்னே நின்றனகாண்;
　　இன்றே அவைமறந்தேன்.
கோயிலெல்லாஞ் சூழ்வந்து
　　கோபுரத்தைக் கைகுவித்துத்
தூய விரதந்
　　தொடங்கித் தவம்புரிந்து
பெற்றதுவும் பெற்று
　　வளர்த்ததுவும் பேணிஅன்பில்
உற்ற மழலை
　　உவந்துமுத்தம் இட்டதுவும்
ஒவ்வோர் விளையாட்டாய்க்
　　கண்டே உளமுழுதும்
கவ்வி யிறுகிக்
　　கவிந்ததுவும் ஆடைகட்டிப்

பொன்னால் அணிபுனைந்து
போற்றி மகிழ்ந்ததுவும்
என்னோடே எங்கும்
அழைத்துச்சென் றெய்தியதும்
"என்பிள்ளை நன்றாகப்
பேசுவான்" என்றெவர்க்கும்
அன்பில் இசைத்தே
அவன்புகழைப் பேசியதும்
கல்வி பயிற்றியதும்
கட்டழகு கண்டவர்கள்
பல்விதமாய்ப் பாராட்டக்
கேட்டுப் பரிந்ததுவும்
எல்லாம்என் உள்ளத்தே
இன்று சுழன்றனகாண்.
நல்லான் அவனை
நலிந்தேனென் றெண்ணமிட்டேன்.
காலத்தின் கோலமென்றன்
கண்ணை அவித்ததென
ஓலமிட்டேன்; துக்கத்தை
உள்ளடக்கி வைத்திருந்தும்

எங்கோ ஒருபிள்ளை
இன்னசெய்தான் என்றுகண்டால்,
அங்கார் அவன்றானே
என்றே அயிர்ப்புறுவேன்.
மோட்டாரிற் பட்டான்;
முழுநதியில் மூழ்கிவிட்டான்;
கூட்டாளி தம்மோடும்
கூட்டில் அடைபட்டான்;
சூதாட்ட மாடித்
துரைத்தனத்தார் கைப்பட்டான்;
மாதோடு பொல்லா
மனத்திற் செயல்புரிந்தான்:
என்பனபோற் பத்திரிகை
யிற்கண்ட போதெல்லாம்
துன்புடையே னாகிச்
சுழன்றுமனந் தத்தளித்தே,
"ஐயோ கடவுளே!
அந்தப் படுபாவி
மெய்யாக இந்த
விதத்திற் கலக்காமல்

நீஅருள வேண்டும்"என்று
நெஞ்சார வேதுதிப்பேன்,
சேயின் அருமை
தெளிந்து.

# என்றும் இளமை

**1**

நெஞ்சு வெடித்துவிட்ட
போது ணர்ச்சியை
நீளத் தெரிப்பதற்கு
வார்த்தை வருமோ?
பிஞ்சுப் பருவத்திலே
அறிவு நிறைந்த
பிள்ளை பறிகொடுத்த
துக்கத் தினையாம்

கொஞ்சம் உளந்திறந்து
சொல்லுவ மென்றுல்
குமுறி இதயம்பிளந்
திற்று விடுமே.
பஞ்சை உலகத்தினில்
மானிட னுக்குப்
பாசப் பொருள் நிலேக்க
மார்க்கம் இல்லேயே!

2

கண்ணே மூடிக்கொண்டால்
எங்கள் ராமுவின்*
கள்ளச் சிரிப்புமுனம்
தோன்று கின்றதே!
எண்ணினுக் குள்ளேஅவன்
நின்று விட்டபின்
எங்கள் அகத்தில்இருள்
புகுந்து கொண்டதால்;

* ராமு: ஒரு குழந்தையின் பெயர்.

திண்ணைக்குச் சோபை இல்லை;
சித்திரம் இல்லை;
தினமும் பராவுகின்ற
தோத்திரம் இல்லை;
உண்ணும் உணவினிலே
நற்சுவை இல்லை;
உயிர்க்கும் உயிர்ப்பினிலே
குளிர்ச்சியும் இல்லை.

3

பாட்டைத் தொடங்குகையில்
தாளம் போடுவான்;
பல்லை இளித்திடையே
கூடப் பாடுவான்;
கோட்டை அவிழ்த்துவிட்டு
மெல்ல வாங்குவான்;
கூட வருவதற்கோர்
காலிலே நிற்பான்;

ஏட்டைப் புரட்டிவிட்டால்
தானும் படிக்க
எண்ணு பவன்எனவே
ஊன்றி நோக்குவான்.
காட்டில் அடக்கிவிட்டேன்;
ஆயினும் என்றன்
கருத்திற் குதித்துநிற்கக்
காணு கின்றேனல்.

4

தொட்ட பொருள்களெல்லாம்
சுட்டிடும் கண்டாய்;
சொன்ன மொழிசெவியில்
நிற்கும்;அவன்கால்
பட்ட இடங்களெல்லாம்
புரண்டு பார்க்கிறேன்;
பாவி மனத்துக்கொரு
சாந்தி இல்லையே!

வெட்ட வெளியினிலே
தோன்றி அழியும்
மின்னலைப் போலஒளி
விட்டு மறைந்தான்.
பொட்டை யமனுக்கொரு
கருணை இல்லையோ?
பூவா அரும்பைஅந்தோ
கிள்ளி விட்டானே!

5

மண்ணில் அவன் இருந்து
வாழ்ந்திடு வானேல்
வயசு நிறைந்துமிகப்
பெரிய வனுமாய்த்
திண்ணென வேபருத்து
நிற்பது காண்பேன்;
சிந்தனை யால்அவன்றன்
இளமை அழகும்

கண்ணின் ஒளியும்மிக
மங்கி விடுதல்
காண்குவன். இப்பொழுதோ
என்னிளஞ் சிங்கம்
வண்ண இளமையுடன்
கண்ணொ ளியுடன்
வந்தென் அகக்கண்ணிலே
நின்றிடு கின்ருன்.

# கலை வளர்க!

## 1

தண்ணியநீர் நிறைந்தஎழிற்
பொய்கை; அங்கே
தாமரைப்பூ மலர்ந்திருக்கும்;
தொட்டில் போல
வண்ணமலர் தனை அலைகள்
ஆட்ட அந்த
மலர்த்தேனை உண்டிதழிற்
பள்ளி கொண்டு

பண்ணிசையைப் பெடையோடே
பாடும் வண்டின்
பான்மையினைக் கண்டதுண்டோ?
ஒருகால் சற்றே
எண்ணமின்றிப் பார்த்திருப்போம்
எனினும், அந்த
எழிலினைப்பா வினிற்கண்டால்
ஆஆ! என்போம்.

2

கண்டபொரு ளினில்அழகைக்
காண மாட்டோம்;
காண்பதிந்த வாறென்றே
காட்டு கின்ருன்,
அண்டுபெருங் கவிஞன்;அதை
ஓவி யத்தில்
அமைத்துணரச் செய்கின்ருன்
கலைஞன்; முன்பு

கண்டதெலாம் புதுமெருகு
கொண்டு நிற்கக்
காண்கின்றேம்; காட்டுகின்றுன்.
இயற்கைத் தேவி
மண்டும்எழில் அவன்கலேயில்
விளக்கம் கொள்ள
மதியாமல் இருந்தநாம்
மதிக்கப் போந்தோம்.

3

அழுக்கடைந்து குலேந்தஉடை,
முதுகில் ஒட்டும்
அடிவயிறிக் கோலத்தில்
ஏழை வந்தால்
சழக்கெனவே விழிதிருப்பிக்
காறித் துப்பிச்
சனியனென்றே வைதோடித்
தப்பு கின்றேம்;

பழுத்தஉணர் வினைக்கோலம்
செய்து காட்டும்
பான்மைபெறும் ஓவியன்அவ்
வேழை தன்னை
இழுத்துவைத்துச் சித்திரத்தில்
எழுதி விட்டால்,
"என்னஎழில்! என்னஎழில்!"
என்போம் அன்றே!

4

பாலைநிலந் தனில்ஏக
நெஞ்சம் அஞ்சிப்
பதறுமென்பர்; கவிஞன்வனை
பாலை தன்னில்
சாலவெகு நாள்உலவி
அங்கே ஓடித்
தவிக்கின்ற மானை நாம்
பார்த்து நிற்போம்.

பாலகனை இழந்ததாய்
பரிவுற் றேங்கப்
பார்ப்பதற்குக் கூசுகின்றோம்;
கவியில் வந்தால்
ஏலஅதைப் பலதடவை
படிப்போம்; கூத்தில்
எத்தனையோ முறைஅதனைப்
பார்க்கச் செல்வோம்.

### 5

கடவுள்செய் படைப்பினிலே
காணு இன்பம்
கலைஞன்றன் படைப்பினிலே
காணு கின்றோம்.
மடலவிழும் மலர்உலகில்
வாடிப் போகும்;
வண்ணவோ வியன்மலரோ
வாடல் இல்லை.

உடல்குலைந்தே அழியும்என்பர்;
எனினும் இந்த
உடலழகை அழியாமற்
கலையிற் காண்போம்.
இடரின்றி இன்புதவி
நெடுநாள் வாழும்
இயல்புள்ள பொருள்கலைஞன்
படைப்பே அன்றோ?

6

கண்ணனென்றும் இராமனென்றும்
முருகன் என்றும்
கருதிஇசை பாடிக்கை
குவித்துப் போற்றும்
வண்ணம்அந்தக் கடவுளரை
வகுத்தார் யாவர்?
வடிவுடைய ஓவியமும்
சிலையும் இன்பம்

நண்ணுசுவைக் காவியமும்
படைத்து நெஞ்சில்
நாட்டிவிட்ட பெருங்கலைஞர்
கூட்டம் அன்ரே ?
திண்ணமுற அவர்வைத்த
உருவில் பாட்டில்
தெய்வமெலாம் வாழ்வுபெறும்
சிறப்புக் கண்டோம்.

7

செந்தமிழ்நாட் டினிற்கலைகள்
செழித்து வாழ்ந்த
சிறப்பினைஅக் கோயில்கள்
நின்று காட்டும்.
வந்தனையும் வழிபாடும்
நிற்க, அங்கே
மலிசுவைசேர் ஓவியத்தைச்
சிற்பச் சீரைச்

சொந்தமுறு பாடல்களை
இசையைக் கூத்தைச்
சொல்லநாப் படைத்திருக்கும்
வல்லார் யாரே ?
முந்தும்அன்பு வாழ்வினிலே
சாந்தச் சூழ்வில்
முளைத்தகலைச் செல்வத்தின்
குவியல் கண்டீர் !

8

இலையிருந்தும் மலர்இல்லா
வனம்போல் நல்ல
எணமிருந்தும் செயலில்லா
மனிதனைப்போல்
அலையிருந்தும் ஆழமிலாக்
கடல்போல் செல்வம்
அனைத்தும்உள ஆயிடினும்
கலைஇல் வாழ்வு

பொலிவழிந்த தாகும்என்னும்
உண்மை ஓர்வோம் ;
பொங்குபுது வளம்பல்க
வேண்டும் இந்நாள்,
" கலைமலிக ! கலைவாழ்க !
கலைகள் ஓங்கிக்
கலைமயம்நா டாக!" என்றே
வாழ்த்து வோமே !

# ரேடியோவிலே

1

ரேடி யோவிலே—திவ்ய
ரேடி யோவிலே
தேடி ஓடிக் கேட்கும் சேதி
யாவையும் கேட்போம்.

2

சாத்திரம் கேட்போம்;—தெய்வத்
தோத்திரம் கேட்போம்;
சாது மாந்தர் ஓதும் நீதி
யாவையும் கேட்போம்.

3

கீர்த்தனம் கேட்போம்;—உலகப்
போர்த்திறம் கேட்போம்;
கிண்டி நெஞ்சில் வீரம் பெய்யும்
கீதங்கள் கேட்போம்.

4

காற்றி லேஒளி—மிதந்து
காதிற் பாயவே
சாற்றும் இன்பப் பேச்சுக் கேட்டுச்
சந்தோ ஷங்கொள்வோம்.

5

இருந்த வண்ணமே—உலகில்
எட்டுத் திக்கிலும்
பொருந்து செய்தி அத்த ணையும்
பூரித்துக் கேட்போம்.

## 6

கலியு கம்அடா !—விந்தைக்
கலியு கம்அடா!
தொலைவு தூரம் என்ப தில்லை
ரேடி யோவிலே!*

* முதல் முதலில் சென்னையில் வானொலி நிலையம் நிறுவிய போது (1938) பாடியது.

# என்ன வெயில் !

1

என்னவெயில்! என்னவெயில்!
கதிரோன் கோபம்
இத்தனைஏன் உயிர்களின்மேற்
காட்டு கின்ருன்?
பொன்னைவெளி யினில்வைத்தால்
உருகி யோடும்;
புழுக்கத்தால் உடல்வேர்வை
வெள்ளம் மூழ்கும்;

சின்னக்கை விசிறிகளை
ஆட்டிப் பிய்த்துச்
செய்வதென்ன? காற்றென்னும்
பேரும் இல்லை.
இன்னுமுயன் றிடின்கானற்
காற்றே வீசும்;
என்னவெயில்! என்னவெயில்!
என்னே! என்னே!

2

மூச்சுவிட முடியவில்லை;
கண்கள் எல்லாம்
மூண்டெரிச்சல் அடங்கவில்லை;
எங்கே னும்போய்
வாச்சபணி செயஎன்றால்
கீழும் மேலும்
மண்டுவெயில் உடலைஉருக்
கிடுமால் அந்தோ!

சீச்சிஇந்த வெயிலோனுக்
கிந்த வண்ணம்
சீற்றமிக எவர்இழைத்தார்
கொடுமை? நீரால்
போச்சுதிந்த வெப்பம்என்றே
இருப்ப தற்கும்
போதவில்லை; என்செய்வோம்?
என்னே! என்னே!

3

பார்த்தாலும் கண்ணெரிச்சல்,
நடந்தாற் காலில்
படரெரிச்சல், தலையெரிச்சல்,
மேலெல் லாமும்
வேர்த்தால்அங் குடம்பெரிச்சல்;
விசிறிக் காற்றே
மிகத்தழலை வீசிஅள்ளிக்
கொட்டும்; நாவில்

என்ன வெயில்!

நீர்த்தாகம் எதனாலும்
தீர்வ தில்லை;
நினைந்துநினைந் தேபாழும்
வயிற்றில் ஆழி
வார்த்தாலும் வறட்சிஅடங்
கினபா டில்லை;
வையகமே நெருப்புலகம்
ஆயிற் றம்மா!

# தொழில்

## 1

"ஞானம் பெற்றவர் செல்வம் படைத்தவர்
நாடும் வாணிகர் மேலவர்; மற்றவர்
ஈனம் உற்றிழி சாதி"என் றோதிய
ஏச்சுச் சாத்திரப் பேச்சினி இல்லைகாண்;
வான வாழ்வைஇம் மாநில மீதிலே
வருவிப் போம்எனத் தோள்கொட்டி ஆர்ப்பவர்,
ஆன தம்வலி யால்தொழில் பற்பல
ஆக்கு வார்,இனி ஞாலத்தை ஆக்குவார்.

## 2

பூமித் தாய்தன் வயிற்றில் இரும்புபொன்
பூணும் வைரம் நிலக்கரி ஆயவை
சேமித் தேவைத்துக் காத்திருக் கின்றனள்;
தேடி அந்தப் பொருள்களை மானிடர்
காமித் தேஅணி ஆபர ணம்பல
கருவி யந்திரம் என்றுரு வாக்கியே
நேமித் தார்எவர்? செல்வச் செருக்கரோ?
நித்தம் நித்தம் தொழில்புரி வாரன்றோ?

## 3

ஏரி நீர்நிறைந் தேஇருந் தால்என்ன?
எங்கும் காணி பரந்திருந் தால்என்ன?
நீரை அந்த நிலத்துக்குப் பாய்ச்சியே
நித்தம் போற்றி உழுது விதைவிதைத்
தேரை ஓட்டும் உழவர் தொழில்செய்தல்
இல்லை என்னின் அவைஇருந் தென்பயன்?
ஊரைச் சீமையைச் சோறுள்ள தாக்குவ
உழவர் கைகள்;பணம்எண்ணும் கைஅன்றே!

4

காலி ருந்தும் நடந்தறி யாச்செல்வர்
கருதி ஏறவே வண்டி படைப்பவர்,
மேலி ருந்துகீழ் நோக்கிய நோக்கினர்
வேளை வேளையில் உண்ணப் படைப்பவர்,
நூலு ணர்ந்துவிஞ் ஞானத்தி னல்மக்கள்
நுகரும் இன்பநல் வாழ்வு பெறவழி
கோலு வார்எண்ணம் அத்தனை யும்உருக்
கொள்ளச் செய்கையிற் காட்டுவார் யாவரே?

5

வீரர் போர்செய வேலையும் வாளையும்
மிகப்ப டைத்து வழங்கிக் கலைஞர்க்குக்
கூர்மை யுள்ள உளிகள் எழுதுகோல்
கொட்டும் மத்தளம் வீணை முதலிய
சீர்மை யோடு படைப்பவர், தம்தொழில்
செய்தல் இன்றி மறந்துவிட் டால்இந்தப்
பாரி லேகலை ஏது? கலைஞர்கள்
படம்இ ழந்தபாம் பென்ன ஒழிவரே!

## 6

உண்ண உண்ண உணவை அளிப்பவர்,
　　உடுக்க நீள்உடை நெய்து கொடுப்பவர்,
வண்ணம் ஆர்அலங் காரப் பொருள்பல
　　வகையில் ஆக்கி நமக்கு வழங்குவார்,
சுண்ணம் செங்கல் பொருந்திய மாளிகை
　　தூய கோயில் சமைத்துத் தருபவர்,
எண்ண எண்ண விரியும் தொழிலினர்
　　யாவர்? அன்னவர் தோள்வலி வெல்கவே!

# தீபாவளிப் பாட்டு

உள்ளம்

1

உள்ளத்துள் ளேஉள்ள கொள்ளைத் துயர்களை
ஓட்டித் தொலைத்திடுவோம்;—அருள்
வெள்ளத்தி லேமிதந் தானந்த மூர்த்தியின்
மெய்ம்மைக் கழல்நினைவோம்.

2

நெஞ்சில் உதிக்கும் அசுரஎண் ணங்களை
நீறு படுத்திடுவோம்;—அன்று
வஞ்ச நரகனை மாய்த்தொளி தந்து
மகிழ்ந்தருள் கண்ணனைப்போல்.

உடல்

3

ஏறிய மெய்யின் அழுக்கெலாம் போகவே
எண்ணெய் முழுக்கிடுவோம்;—தூய்மை
வீறிய கோடி உடுத்துப் புதுமை
விளைவில் திளைத்திடுவோம்.

வீடு

4

மூலை முடுக்கிலும் சோதி பரப்ப
முழுவிளக் கேற்றிடுவோம்;—இந்த
ஞாலம் முழுவதும் தீவிளி யாதலின்
நண்ணும் இருளில்லையே !

நாடு

5

நாட்டினிற் கைத்தொழில் ஓங்கிட இன்றொரு
நல்லசங் கற்பம் கொள்வோம்;—புது
வேட்டியில் விளக்கினில் எண்ணெய் முழுக்கினில்
விளங்கு கருத்துணர்வோம்.

6

உள்ளத்துள் ளேஒளி, மெய்யில் விளக்கம்,
உவந்தஇல் லத்தில்சுடர்,—எங்கள்
தள்ளற் கரியபொன் நாட்டினில் இன்பம்
தழைப்பதே தீபாவளி !

# புத்தாண்டு

**1**

காலமெனும் பொய்கையிலே
பூத்த பூவில்
கரஆண்டாம் பூஉதிர்ந்து
விட்ட தாக
ஞாலமதிற் புதியநினை
வெழும்ப இன்று
நந்தனஆண் டென்னும்ஒரு
புதுப்பூக் கண்டோம்!

மூலமுடி வில்லாத
காலத் துக்குள்,
முதலென்றும் முடிவென்றும்
அளக்கும் ஆண்டில்,
ஏலும்நம் வாழ்வினிலே
வரவும் போக்கும்
என்னவென்று பார்ப்பதற்கு
முயல வேண்டும்.

2

சென்றபல காலத்தும்
மனிதப் பண்பில்
சிந்திவிட்ட பகுதியெலாம்
நினைத்துப் பார்ப்போம்;
இன்றினிமேல் அப்பண்பின்
குறையைப் போக்க
என்னசெய்வோம் என்றெண்ணிப்
பார்த்தல் நன்றே;

என்றுமுள கடவுள்அருள்
பெறுதற் காக
ஏதேனும் செய்தோமா
என்று நோக்கித்
துன்றுமிந்தப் புத்தாண்டில்
அன்பை நீட்டித்
தொல்புவியில் வாழுதற்கு
முயல வேண்டும்.

3

போனதையே நினைந்துமிகப்
புலம்பல் வேண்டாம்;
புகுந்தநிகழ் காலத்தை
எதிர்கா லத்தை
ஈனமிலா வகைபோக்கிப்
பிறருக் கான
இன்பமிகு செயல்செய்து
வாழும் எண்ணந்

தான் நமக்கு வேண்டும். அந்த
எண்ணம் இந்தத்
தாரணியில் பலர்க்கும்வந்து
விட்டால் அன்றே
தேன்நிலவு கிருதயுகம்
பார்மேல் தோன்றும் ;
சிறியரென்ற இனத்தினர் இல்
லாமற் போவார்.

4

அடிஎடுத்து முன்வைத்துச்
சென்று விட்ட
அதனாலே பயன் இல்லை;
அடிஒவ் வொன்றும்
படிஅடுத்த உயிர்த்துயரம்
போக்கும் பாங்கில்
பதிந்ததா என்பதனைப்
பார்க்க வேண்டும் ;

துடிதுடிப்பும் சுறுசுறுப்பும்
அமைதல் வேண்டும் ;
தூங்காமல் சோராமல்
உழைக்க வேண்டும் ;
முடிஎடுத்து நிமிர்ந்துவிறல்
காட்ட வேண்டும் ;
மூதேவி எனும்ஒருத்தி
முடிய வேண்டும்.

5

காந்திமகான் பிறந்துநடந்
திருந்த நாட்டில்
கால்வைத்து நடக்கின்றோம்
என்னும் எண்ணம்
ஏந்தும்உளம் வேண்டும்.அவர்
காட்டி விட்ட
எத்தனையோ நெறிகள்உண்டாம்.
அவற்றைத் தேர்ந்து,

மாந்தரெலாம் சோதரராய்
உயிர்கள் யாவும்
வையத்தில் ஒருகுடியாய்
வாழ்வ தற்கே
ஆம்தகுதி ஏதென்றே
ஆய வேண்டும்;
அவ்வழியில் நம்வாழ்க்கை
நிகழ வேண்டும்.

6

இமயமலை நமதுமலை
என்றுற் போதா
தியாம்மலைபோல் நிமிர்ந்துநிற்க
வேண்டும்; கங்கை
நமதுநதி எனல்மட்டும்
போதா திந்த
நாட்டினிலே ஒழுக்கநிலை
உயர வேண்டும்;

அமைஉவமை யில்லாத
உபநி டங்கள்
ஆர்செய்தார்? அவர்எங்கள்
முன்னோர் என்று
சமைகின்ற பெருமிதத்தோ
டறிவும் அன்பும்
சாற்றுமதற் கேற்றபடி
இருக்க வேண்டும்.

7

வந்துசென்ற ஆண்டுகளில்
செய்த தீமை
வகையெல்லாம் போகஇனி
நன்மை ஒன்றே
சிந்தைசெய்வோம்; நன்மைதரும்
சொல்லே பேசிச்
சிறுமைதவிர்ந் தினிமைதரும்
செயலே செய்வோம்;

"நந்தனஆண் டெமக்கறிவு
தந்த ஆண்டு;
நாம்உயர்ந்தோம் பலவகையில்"
எனவே சொல்ல
இந்தவரு டத்தினிலே
முயற்சி செய்தால்
யாவும்நன்மை யாகமுடிந்
திடுதல் திண்ணம்.*

---

* நந்தன ஆண்டு முதல் நாள் பாடியது.

# பொங்கல் பொங்க வேணும்

1

பொங்கல்பொங்க வேணும்; பூசைபோட வேணும்;
மங்களங்கள் ஓங்க வறுமைபோக வேணும்.

2

பாலும்பொங்க வேணும்; பசுவும்பொங்க வேணும்;
மேலும்மேலும் பூமி விளைவுகூட வேணும்.

3

கரும்புமுற்றி நெல்லுக் கதிரும்முற்ற வேணும்;
விரும்புபண்டம் எல்லாம் வேணமட்டும் வேணும்.

4

காணும்மரம் எல்லாம் கனிகுலுங்க வேணும்;
பூணும்நகை யாவும் பொன்சிறக்க வேணும்.

5

தென்றல்வீச வேணும்; தேன்சொரிய வேணும்;
குன்றுபோலே செல்வம் குவிந்திருக்க வேணும்.

6

சுறுசுறுப்பு வேணும்; தூக்கம்போக வேணும்;
விறுவிறுப்பு வேணும்; வீரம்மிக வேணும்.

7

வீரம்மிக வேணும்; வெற்றிவர வேணும்;
காரமின்றி யாரும் கலந்துவாழ வேணும்.

8

மெய்விளங்க வேணும்; வேதவாழ்வு வேணும்;
தெய்வஅருள் வேணும்; தேசம்ஓங்கவேணும்.